# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8

Vol 2 | No 43

இலவச பிரதி
Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

13.12.2009

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


# 'வடக்கின் மனிதாபிமான நடவடிக்கைகளுக்கு அமெரிக்கா தொடர்ந்தும் உதவும்' – ரொபேர்ட் பிளேக்

*எஸ்.ரமணன்*

இடம்பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் மற்றும் நலன்புரி நிலையங்களில் காணப்படும் வசதிகள் குறித்து தான் திருப்தி அடைந்துள்ளதாக அமெரிக்காவின் தெற்காசிய விவகாரங்களுக்கான உதவி இராஜாங்க செயலாளர் ரொபேர்ட் பிளேக் தெரிவித்துள்ளார்.

இரண்டு நாள் விஜயம் மேற்கொண்டு இலங்கைக்கு வருகை தந்த அவர், வவுனியாவில் உள்ள நலன்புரி நிலையங்களுக்கும் மன்னாரில் மீள்குடியேற்ற பகுதிகளுக்கும் நேரில் சென்று நிலமைகளை அவதானித்தார்.

தனது விஜயம் குறித்து கொழும்பில் செய்தியாளர் சந்திப்பில் கருத்துரைத்த ரொபேர்ட் பிளேக், இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமானப் பணிகள் தொடர்பில் திருப்தி அடைவதாகக் குறிப்பிட்டார்.

**வடக்கில் மேற்கொள்ளப்படும் கண்ணிவெடி அகற்றும் நடவடிக்கைகளுக்கு அமெரிக்க அரசாங்கம் சுமார் 6.6 மில்லியன் அமெரிக்க டொலர் நிதி உதவியினை வழங்கியுள்ளது**

எதிர்வரும் ஜனவரி மாதத்திற்கு முன்னர் அரசாங்கம் இடம்பெயர்ந்த மக்கள் அனைவரையும் மீள்குடியேற்ற முடியும் என்று வெளியிட்டுள்ள அறிவிப்பினை வரவேற்றுள்ள அவர், அமெரிக்கா தொடர்ந்தும்

>> 3ஆம் பக்கம்

## சர்வதேச மனித உரிமைகள் தினம்

- **சர்வதேச மனித உரிமைகள் தினம் ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் 10ஆம் திகதி உலகளாவிய ரீதியில் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது.**
- **மனித உரிமைகள் பாதுகாக்கப்படுவதை அனைத்துத் தரப்பினருக்கும் வலியுறுத்தும் வகையில் இத்தினம் ஐக்கிய நாடுகள் சபையினால் 1948ஆம் ஆண்டு பிரகடனம் செய்யப்பட்டது.**
- **உலகில் வாழ்கின்ற சகல மக்களுக்கும் சமமான சுதந்திரமும் உரிமையும் பெற தகுதியுடையவர்களாவர் என்பதே மனித உரிமை சட்டத்தின் அடிப்படையாகும்.**




சர்வதேச மனித உரிமைகள் தினத்தை முன்னிட்டு வவுனியாவில் நடைபெற்ற ஊர்வலம்

நன்றி : பி.பி.சி. இணையத்தளம்

# மீளக் குடியேறும் மக்களின் நலன்களை கவனிப்பதற்கு பொது மக்கள் இராணுவ ஒருங்கிணைப்பு பிரிவு

வடக்கில் மேற்கொள்ளப்பட்டு வரும் மீள்குடியேற்ற நடவடிக்கைகளில் பொது மக்கள் இராணுவ ஒருங்கிணைப்பு பிரிவுகள் முக்கிய இடம் வகிக்கும் என மனித உரிமைகள் அமைச்சின் செயலாளர் கலாநிதி ரஜீவ விஜேயசிங்க தெரிவித்துள்ளார்.

சர்வதேச மனித உரிமைகள் தினத்தை முன்னிட்டு வவுனியா மாவட்ட செயலகத்தில் நடைபெற்ற பயிற்சிப்பட்டறையில் கலந்து கொண்டு உரையாற்றும் போதே அவர் இந்த கருத்தை வெளியிட்டுள்ளார்.

மனித உரிமைகள் அமைச்சு,ஐக்கிய நாடுகளின் சிறுவர் அபிவிருத்தி நிதியத்துடன் இணைந்து ஆரம்பிக்கப்பட்டுள்ள இந்த திட்டமானது அரசாங்க அதிபர் பிரிவுகள்,பிரதேச செயலர் பிரிவுகள்

>> 3ஆம் பக்கம்

# மதவாச்சியூடான வாகனப் போக்குவரத்து பாஸ் நடைமுறை நீக்கம்




*டி. சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

அநுராதபுரம் ஊடாக வடக்கு செல்லும் வாகனங்களுக்கு விதிக்கப்பட்டிருந்த பாஸ் நடைமுறையானது கடந்த 5ஆம் திகதி முதல் நீக்கப்பட்டது. பாதுகாப்பு அமைச்சின் தீர்மானத்திற்கமையவே இந்த பாஸ் நடைமுறை நீக்கப்பட்டுள்ளது.

இதுபற்றி இராணுவ பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார தெரிவிக்கையில், 'நாட்டில் கடந்த காலங்களில் ஏற்பட்டிருந்த பாதுகாப்பற்ற சூழ்நிலை காரணமாக அநுராதபுரத்திலிருந்து வவுனியா, மன்னார் போன்ற பகுதிகளுக்குச் செல்லும் வாகனங்களுக்கு பாஸ் முறை நடைமுறைப்படுத்தப்பட்டது. தற்போது சுமுகமான சூழ்நிலை நிலவுவதால் கடந்த 5ஆம் திகதி முதல் வாகனங்களுக்கான பாஸ் முறை நீக்கப்பட்டது.

**"மதவாச்சி சோதனைச் சாவடியூடாக பாஸ் முறை நீக்கப்பட்டமையானது வடக்கிற்கும் தெற்கிற்குமிடையில் பாலத்தை ஏற்படுத்தியுள்ளது"**

இதனடிப்படையில் அநுராதபுரத்தினூடாக வவுனியா, மன்னார் போன்ற பகுதிகளுக்குச் செல்லும் வாகனங்களும், வடக்கிலிருந்து அநுராதபுரம் ஊடாக வேறு இடங்களுக்குச் செல்லும் வாகனங்களும் பாஸினை கையளிக்க வேண்டிய அவசியம் இல்லை. அதேவேளை, ஒரு சில பாதுகாப்பு காரணங்களுக்காக வாகனங்கள் சோதனைக்குட்படுத்தப்படும்'' என அவர் கூறினார்.

>> 3ஆம் பக்கம்

# “கிராமங்கள் யுத்த காலத்திற்கு முன்பிருந்த நிலைக்கு திரும்பி வருகிறது”

*இடம்பெயர்ந்த மக்களின் மீள்குடியேற்றப் பணிகளை அரசு துரிதப்படுத்தியுள்ள அதேவேளை, மீள் குடியேறிய மக்களுக்குத் தேவையான அடிப்படை வசதிகளை அமைத்துக் கொடுப்பதிலும் வாழ்வாதாரத்தை ஆரம்பிக்க ஊக்குவிப்பதிலும் கவனம் செலுத்தி வருகின்றது. இது குறித்த தகவல்களை முல்லைத்தீவு மாவட்ட அரச அதிபர் இமெல்டா சுகுமார் எமது ‘மீண்டும் வாழ்வோம்’ பத்திரிகைக்கு அளித்த நேர்காணலில் தெரிவித்தார்.*



முல்லைத்தீவு மாவட்ட அரச அதிபர் இமெல்டா சுகுமார்




**முல்லைத்தீவில் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் தற்போது எவ்வாறு இடம்பெற்று வருகின்றன?**

தற்போது முல்லைத்தீவு மாவட்டத்தின் துணுக்காய் பிரதேச செயலாளர் பிரிவில் சுமார் 1830 குடும்பங்களைச் சேர்ந்த 6000 பேர் மீளக் குடியமர்த்தப்பட்டிருக்கின்றார்கள். நலன்புரி கிராமத்தில் இருந்த துணுக்காய் பிரதேசத்தைச் சேர்ந்த அனைவருமே மீள்குடியேற்றப்பட்டுள்ளனர். அதேவேளை, தமது உறவினர்களுடன் இருக்கும் சுமார் 6000 பேர் துணுக்காய் பிரதேசத்திற்குப் போவதற்காக எமது அலுவலகத்தில் பதிவு செய்துள்ளனர். இதைவிட மாந்தை கிழக்கு பிரதேச செயலாளர் பிரிவில் சுமார் 800 குடும்பங்களைச் சேர்ந்த 3000 பேர் குடியமர்த்தப்பட்டிருக்கின்றார்கள். ஏறத்தாள 10,000 பேர் வரை இந்த வாரம் குடியமர்த்தப்பட்டுவிடுவார்கள். இதேவேளை ஒட்டிசுட்டானில் ஏ9 வீதிக்கு மேற்கில் இருக்கின்ற நான்கு கிராம சேவையாளர் பிரிவுகளிலும் மக்களை மீள்குடியேற்றும் நடடிக்கைகள் நடைபெற்று வருகின்றன.

*கண்ணிவெடிகள் அகற்றப் பட்டதாக அறியப்பட்ட சுமார் 4000 ஏக்கர் வயல் நிலங்கள், ஒரு குடும்பத்திற்கு 2 ஏக்கர் வீதம் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளன*

**மீள்குடியேற்றப்பட்ட மக்களின் வாழ்வாதாரம் தொடர்பாக மேற்கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கைகள் என்ன?**

மீள்குடியேற்றப்பட்டவர்களில் பலர் விவசாயத்தை வாழ்வாதாரமாகக் கொண்டவர்கள். இவர்களுக்காக கண்ணிவெடிகள் அகற்றப்பட்டதாக அறியப்பட்ட சுமார் 4000 ஏக்கர் வயல் நிலங்கள், ஒரு குடும்பத்திற்கு 2 ஏக்கர் வீதம் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளன. விவசாய உபகரணங்களும் இலவசமாக வழங்கப்பட்டுள்ளன. அத்தோடு மானிய முறையில் பசளை வழங்கப்பட்டுள்ளது.

**உலக உணவுத் திட்டத்தின் கீழ் மக்களுக்கான ஆறு மாத உலர் உணவுப் பொருட்கள் வழங்கப்பட்டு வருகின்றன. இது தவிர அவர்களுக்கான உப உணவுப் பொருட்கள் கிடைப்பதற்கு எவ்வாறான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன?**

மக்கள் தற்போது கொள்வனவு செய்யும் சக்தியைப் பெற்றிருக்கின்றார்கள். அங்கு கடைகளை நடத்த தனியார் வர்த்தகர்களை ஊக்குவித்துள்ளோம். அவர்களுக்கான இட வசதிகளையும் ஏற்படுத்திக்கொடுத்துள்ளோம். தற்போது இங்குள்ள கிராமங்கள் யுத்த காலத்திற்கு முன்பிருந்த நிலைக்குத் திரும்பி வருகிறது என்று கூறமுடியும்.

**முல்லைத்தீவு மாவட்டத்தில் தபால் சேவை ஆரம்பித்திருப்பது பற்றிக் கூற முடியுமா?**

தற்போது மக்கள் குடியேறியுள்ள அனைத்துப் பிரதேசங்களிலும் தபால்துறை தங்களுடைய சேவைகளை ஆரம்பித்துள்ளது. உப தபால் நிலையங்கள் அனைத்தும் அங்கு இயங்கத்தொடங்கியுள்ளன.

**பொலிஸ் சேவை குறித்து எவ்வாறான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்று கூற முடியுமா?**

எங்கே தற்காலிக பொலிஸ் நிலையங்களை அமைக்க வேண்டுமோ அந்த இடங்களில் பொலிஸ் சேவை நடத்தப்பட்டு வருகின்றது. மாங்குளத்தில் நிரந்தரமாகத் தங்கி அவர்கள் தன்களது சேவையை செய்து வருகின்றார்கள். அங்கு முழுமையாக சிவில் நிர்வாகம் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

**எதிர்வரும் ஜனாதிபதித் தேர்தலில் மீள்குடியேற்றப்பட்டவர்கள் வாக்களிக்க எவ்வாறான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன?**

*மக்கள் தற்போது கொள்வனவு செய்யும் சக்தியைப் பெற்றிருக் கின்றார்கள். அங்கு கடைகளை நடத்த தனியார் வர்த்தகர் களை ஊக்குவித்துள்ளோம்*

தேர்தல் ஆணையாளரின் பணிப்புரைக்கு அமைய இந்த மக்களுக்கான தற்காலிக அடையாள அட்டை கிராம சேவயாளர், உதவி அரசாங்க அதிபரின் உறுதிப்படுத்தலோடு வழங்கப்படும். இதேவேளை தேர்தல் ஆணையாளரின் வழி நடத்தலில் ஒரு குழுவினர் கடந்த வாரம் எங்களை சந்தித்து தேர்தல் நடத்துவதற்குரிய பூர்வாங்க நடவடிக்கைகள் பற்றி எங்களுடன் ஆலோசித்தார்கள்.

---



## பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்

### ஆப்கானிஸ்தான்

ஆப்கானிஸ்தானின் நெளசாட் மாவட்டத்தில் படையினருக்கும் தலிபான் போராளிகளுக்குமிடையில் இடம்பெற்ற மோதல் காரணமாக 2000 குடும்பங்கள் அவ்விடத்தைவிட்டு பலாத்காரமாக வெளியேற்றப்பட்டதாக ஆப்கான் செம்பிறை சங்கம் தெரிவித்துள்ளது. எனினும் அப்பகுதியிலிருந்து பொதுமக்கள் பாதுகாப்பான இடங்களுக்கு அனுப்பப்பட்ட பின்னரே தலிபானுக்கெதிரான படை நடவடிக்கைகளை ஆரம்பித்ததாக நேட்டோ படையினர் தெரிவித்துள்ளனர்.

### டென்மார்க்

**டென்மார்க்** இயற்கை அனர்த்தங்களினால் ஏற்படும் பாதிப்புக்களை சிறுவர்கள் எதிர்கொள்வதால் அவர்களுக்கு உதவி செய்ய அனைத்து உலக நாடுகளுக்கும் சேவ் த சில்ரன் அமைப்பு அழைப்புவிடுத்துள்ளது. டென்மார்க் தலைநகர் கொப்பனேஹனில் நடைபெற்று வரும் உலக காலநிலை மாநாட்டில் கலந்துகொண்டுள்ள உலக தலைவர்களுக்கே இந்த அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. 21ஆம் நூற்றாண்டில் உலக வெப்பநிலையானது சிறுவர்களுக்கு பாரிய அச்சுறுத்தலாக உள்ளதாக சேவ் த சில்ரன் அமைப்பு சுட்டிக்காட்டியுள்ளது.



### இந்தோனேசியா

இந்தோனேசியாவில் அண்மையில் ஏற்பட்ட புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு 10ஆயிரம் தற்காலிக வீடுகளை சர்வதேச செஞ்சிலுவை சங்கம் அமைத்துக்கொடுக்கவுள்ளது. புயலால் பாதிக்கப்பட்ட மக்கள் சேதமடைந்த தங்களது வீட்டுக்கருகில் தற்காலிகக் கொட்டில்களை அமைத்து வாழ்ந்து வருவதாக நோர்வே செஞ்சிலுவைச்சங்கத்தின் செயலாளர் நாயகம் போர்ஜ் பிரெண்டி தெரிவித்துள்ளார். இதேவேளை, புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு சுகாதாரம், குடிநீர் மற்றும் மலசலகூட வசதிகளை இச்சங்கம் ஏற்படுத்திக் கொடுத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### தென் ஆபிரிக்கா

தென் ஆபிரிக்காவுக்கு குடிபெயர்ந்துள்ள வெளிநாட்டவர்களுக்கும் அங்கு தஞ்சமடைந்தவர்களுக்கும் அந்நாட்டு அரசு முறையான சுகாதார வசதிகளை ஏற்படுத்திக் கொடுக்கவில்லையென மனித உரிமைகள் கண்காணிப்பகம் தெரிவித்துள்ளது. அங்கு தஞ்சமடைந்தவர்களை அந்நாட்டு பிரஜைகளாக ஏற்றுக்கொள்ளாமையே இதற்கான காரணம் என கூறப்படுகின்றது. தென் ஆபிரிக்காவில் சுகாதார சேவைகளில் ஈடுபடும் அதிகாரிகள் மற்றும் அங்கு தஞ்சமடைந்துள்ள வெளிநாட்டவர்களிடம் இது தொடர்பாக தகவல்களைத் திரட்டி மனித உரிமைகள் கண்காணிப்பகம் அறிக்கை சமர்ப்பித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஐரோப்பா | ஆசியா | அவுஸ்திரேலியா
வட-அமெரிக்கா | தென்-அமெரிக்கா | ஆபிரிக்கா

---




மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.



# அரசியல் கைதிகள் தொடர்பில் அரசாங்கம் அவதானம்

*டி. சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

பயங்கரவாத மற்றும் அவசரகால சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு தடுப்புக் காவலில் வைக்கப்பட்டுள்ள கைதிகள் தொடர்பில் அரசு கவனம் செலுத்தியுள்ளது.

இவர்களில் குற்றமற்றவர்களை விடுவிக்கவும் ஏனையோருக்கெதிராக சட்ட நடவடிக்கை எடுக்கவும் தீர்மானிக்கப்பட்டுள்ளதாக நீதி மற்றும் சட்ட மறுசீரமைப்பு பிரதியமைச்சர் புத்திரசிகாமணி தெரிவித்தார்.

இவர்களில் சுமார் 30 பேர் கடந்த ஒரு மாத காலப்பகுதிக்குள் விடுதலை செய்யப்பட்டுள்ளார்கள் எனவும் அவர் தெரிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'பயங்கரவாத மற்றும் அவசரகால சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்ட சுமார் 631 பேர் தொடர்ந்தும் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் தொடர்பாக நடைபெற்றுவரும் விசாரணைகளுக்கமைய விடுதலை செய்யக் கூடியவர்களை விடுதலை செய்யவும், சட்ட நடவடிக்கை எடுக்கக் கூடியவர்கள் மீது சட்ட நடவடிக்கை எடுக்கவும் ஏற்பாடுகளை செய்து வருகிறோம். கடந்த ஒரு மாத காலப்பகுதிக்குள் 30 பேர் குற்றமற்றவர்கள் என நிரூபிக்கப்பட்டமையினால் அவர்களை நாம் விடுதலை செய்துள்ளோம். அத்தோடு இவர்கள் தொடர்பில் விசாரணை நடத்த சட்ட மா அதிபர் அலுவலகத்தால் 10 பேர் கொண்ட சட்டத்தரணிகள் குழு அமைக்கப்பட்டுள்ளதோடு, இவர்களின் அறிக்கைகளுக்கமைய மேலதிக நடவடிக்கைகள் முன்னெடுக்கப்படும்' என்றார்.

இதேவேளை, பயங்கரவாத மற்றும் அவசரகால சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டிருந்தவர்கள் கடந்த செவ்வாய்க்கிழமை (08) உண்ணாவிரதப் போராட்டத்தில் ஈடுபட்டனர்.

நாட்டில் யுத்தம் முடிந்து சமாதானம் பிறந்துள்ள இவ்வாறான சூழ்நிலையில் தம்மை விடுவிப்பது அல்லது தமக்கு எதிராக சட்ட நடவடிக்கை எடுப்பதே சிறந்தது என உண்ணாவிரதத்தில் ஈடுபட்ட கைதிகள் கோரிக்கை விடுத்தமை குறிப்பிடத்தக்கது.



## 'பயங்கரவாத நடவடிக்கைகளில் ஈடுபடாதவர்களை விடுவிப்பது தொடர்பில் கவனம் செலுத்தப்பட்டுள்ளது'

**மேஜர் ஜெனரல் தயா ரட்நாயக்க**

இந்நிலையில், புலிகள் இயக்கத்தில் இணைந்து செயற்பட்டார்கள் என்ற குற்றச்சாட்டில் கைது செய்யப்பட்டவர்களில் பயங்கரவாத நடவடிக்கையில் ஈடுபடாதவர்கள் என உறுதிப்படுத்தப்படுபவர்களையும் விடுதலை செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாக புனர்வாழ்வுகளுக்கான ஆணையாளர் நாயகம் மேஜர் ஜெனரல் தயாரட்நாயக்க தெரிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'பயங்கரவாத நடவடிக்கைகளில் ஈடுபடாதவர்களைவிடுவிப்பது தொடர்பில் கவனம் செலுத்தப்பட்டுள்ளது. அதனடிப்படையில் சட்ட வல்லுநர்கள், கல்விமான்கள், பாதுகாப்புத் தரப்பினர் போன்றோரைக் கொண்டு தற்போது குழுவொன்று அமைக்கப்பட்டுள்ளது. இந்த குழுவின் ஆலோசனைக்கமைய மேலதிக நடவடிக்கைகள் முன்னெடுக்கப்படும். இவ்வாறு விடுவிக்கப் படுபவர்கள் அவர்களது பெற்றோர் அல்லது உறவினர்களிடம் ஒப்படைக்கப்படுவார்கள் என அவர் கூறினார்.

தடுப்புக் காவலில் வைக்கப்பட்டுள்ள குற்றமற்றவர்களை விடுதலை செய்யக் கோரியும், மீள் புனர்வாழ்வுக்குட்படுத்தப்பட்டவர்களுக்கு மன்னிப்பு வழங்கக் கோரியும் வேண்டுகோள் முன்வைக்கப்பட்டுள்ள இச்சந்தர்ப்பத்தில் அரசு அவர்கள் தொடர்பில் கவனம் செலுத்தியுள்ளமையைப் பலரும் வரவேற்றுள்ளனர்.

## மீளக்...... *(1ஆம் பக்கத் தொடர்ச்சி)*

மற்றும் கிராமசேவகர் பிரிவுகள் என பல்வேறு பிரிவுகளிலும் பொது மக்கள் இராணுவ ஒருங்கிணைப்பு பிரிவுகளை செயல்படுத்துவதே தமது நோக்கம் என்றும் ரஜீவ விஜேயசிங்க தெரிவித்தார்.

மீள் குடியேறும் மக்களுக்கான மனிதாபிமான உதவிகளை வழங்குவதில் இராணுவம்,பொது அமைப்புகள்,அரசாங்கம் மற்றும் மனிதாபிமான அமைப்புகள் ஆகியவை ஒன்றிணைந்து செயல்படுவதற்கான வழி வகைகள் குறித்து இந்த நிகழ்வின் போது ஆராயப்பட்டுள்ளது.

ஏனையவர்களுடன் ஒன்றிணைந்து செயல்படுவது குறித்து ஆராயாமல் மற்றவர்கள் என்ன செய்கின்றார்கள் என்பது பற்றிய ஊகங்களை மட்டுமே நாங்கள் மேற்கொண்டு வருகின்றோம் என்று இந்த நிகழ்வில் கலந்து கொண்ட ஐக்கிய நாடுகளின் அகதிகளுக்கான உயர் ஸ்தானிகராலயத்தின் பிரதிநிதியான சக்குரா அட்சுமி தெரிவித்தார்.

இந்த நிகழ்வானது பொலிசார்,இராணுவம்,பொதுமக்கள் மற்றும் சமூக அமைப்புகள் ஆகிய நான்கு வேறுபட்ட தரப்பினரை ஒன்றிணைத்து அவர்களிடையிலான தொடர்பாடலை மேம்படுத்துவதை நோக்கமாக கொண்டது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

மீளக் குடியமரும் மக்களின் மனித உரிமைகளை பேணுவதற்கும் அவர்களின் தேவைகளை பூர்த்தி செய்வதற்கும் பல்வேறு மனிதாபிமான அமைப்புகளும் தமது நடவடிக்கைகளை வினைத்திறனுடன் மேற்கொண்டு வரும் வவுனியா மாவட்டமானது சர்வதேச மனித உரிமைகள் தினத்தை அனுஷ்டிப்பதற்கு பொருத்தமான மாவட்டம் என்று கலாநிதி ரஜீவ விஜயசிங்க சுட்டிக்காட்டியுள்ளார்.

மொழிப் பயிற்சிகள், சிறு கடனுதவிகள் ஊடாக பெண்களை வலுவூட்டல் மற்றும் கூட்டுறவுக் கடன்கள் மூலம் விவசாய நடவடிக்கைகளை அபிவிருத்தி செய்தல் போன்ற நடவடிக்கைகளை உள்ளூர் பங்காளர் நிறுவனங்களுடன் இணைந்து மேற்கொள்ள தமது அமைச்சு திட்டமிட்டுள்ளதாகவும் அவர் குறிப்பிட்டார்.

## உங்கள் எண்ணங்களை எமக்குத் தெரிவியுங்கள்

*அன்பார்ந்த வாசகர்களே,*

*''மீண்டும் வாழ்வோம்'' தகவல் இதழானது இடம்பெயர்ந்து இடைத்தங்கல் முகாம்களில் வாழும் உங்களது நலன் கருதி வாரம் தவறாமல் வெளிவந்து கொண்டிருப்பதை அறிவீர்கள்.*

*இடம்பெயர்ந்தோர் தொடர்பிலான அரச மற்றும் அரச சார்பற்ற நிறுவனங்களின் முன்னெடுப்புகள், உங்கள் வாழ்வை மீளக்கட்டியெழுப்பக் கூடிய வாழ்வாதாரத் தகவல்கள் எனப் பலதரப்பட்ட விடயங்களையும் காத்திரமான முறையில் உங்களிடம் சேர்ப்பிக்கும் பணியை ''மீண்டும் வாழ்வோம்'' செய்து வருகிறது.*

*மெனிக்பாமிலுள்ள இடம்பெயர்ந்த மக்கள் யாவரையும் ஜனவரி மாத இறுதிக்குள் மீள்குடியேற்றவிருப்பதாக அரசாங்கம் அறிவித்துள்ள நிலையில், அதன் பிறகான காலங்களிலும் உங்களது வாழ்நிலை மேம்பாட்டுக்கு உதவக்கூடிய தகவல்களைத் தரவேண்டிய அவசியம் தொடர்ந்தும் இருப்பதாகவே நாம் நம்புகிறோம்.*

*இது தொடர்பில் நீங்கள் எமக்கு எழுதி அனுப்பக்கூடிய கருத்துகள் மிகுந்த பயன்பயக்குவதாய் அமையும்.*

*கீழ்க்காணும் விடயங்கள் தொடர்பில் உங்களது அபிப்பிராயங்களை எமக்கு எழுதியனுப்புங்கள்:*

- *''மீண்டும் வாழ்வோம்'' இதழ் மற்றும் வானொலி நிகழ்ச்சி என்பன இதுவரை காலமும் உங்களுக்கு வழங்கி வந்த தகவல்களால் நீங்கள் பயனடைந்துள்ளீர்களா? எவ்வகையான பயன்கள்?*
- *நீங்கள் மீள்குடியமரும் இடங்களில் ''மீண்டும் வாழ்வோம்'' இதழ் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களா?*
- *நீங்கள் எழுத்துத்துறை/இதழியல்துறையில் ஆற்றல் /ஆர்வம் உள்ள பாடசாலை/பல்கலைக் கழக மாணவரா? அவ்வாறாயின் ''மீண்டும் வாழ்வோம்'' இதழுக்கு பங்களிக்க விரும்புகிறீர்களா? (ஆர்வமுள்ளவர்கள் உங்கள் சுயவிபரங்களை எமக்கு அனுப்பி வைக்கலாம். தேவைப்படுமிடத்து நாம் உங்களைத் தொடர்பு கொள்வோம்)*

**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

## மதவாச்சி... *(1ஆம் பக்கத் தொடர்ச்சி)*

இதேவேளை, மதவாச்சி சோதனைச் சாவடியூடாக பாஸ் முறை நீக்கப்பட்டமையானது வடக்கிற்கும் தெற்கிற்குமிடையில் பாலத்தை ஏற்படுத்தியுள்ளதாக வவுனியா மாவட்ட அரசாங்க அதிபர் திருமதி சார்ள்ஸ் தெரிவித்தார். இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'மதவாச்சி சோதனைச்சாவடியூடான பாஸ் முறை நீக்கப்பட்டமையானது அனைத்து தரப்பினருக்கும் பெரும் நன்மையை ஏற்படுத்தியுள்ளது. குறிப்பாக அரச, அரசசார்பற்ற நிறுவனங்களைச் சேர்ந்தவர்களும், வர்த்தகர்களும், பொதுமக்களும் இதனால் பெரும் பயனடைந்துள்ளார்கள்' என்றார். இந்நடவடிக்கையானது மக்களின் எதிர்காலம் குறித்த நம்பிக்கையை ஏற்படுத்தியுள்ளதாகவும் அவர் கூறினார்.

## 'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சி



**'மீண்டும் வாழ்வோம்'' வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல்10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம்.வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகவுள்ளது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும்** http://life-line.internews.lk/ **என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**

எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

## வடக்கின்... *(1ஆம் பக்கத் தொடர்ச்சி)*

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான உதவிகளை வழங்கும் என்றும் உறுதியளித்துள்ளார்.

வடக்கில் மேற்கொள்ளப்படும் கண்ணிவெடி அகற்றும் நடவடிக்கைகளுக்கு அமெரிக்க அரசாங்கம் சுமார் 6.6 மில்லியன் அமெரிக்க டொலர் நிதி உதவியினை வழங்கியுள்ளதாகவும் தொடர்ந்தும் அந்தப் பணிகளுக்குத் தமது அரசாங்கம் பூரண ஒத்துழைப்பை வழங்கும் என்றும் உதவி இராஜாங்க செயலாளர் குறிப்பிட்டுள்ளார்.

இலங்கையின் நீண்டகால முரண்பாடுகளுக்குத் தீர்வாக அதிகாரங்களைப் பரவலாக்கும் அரசியல் தீர்வுத் திட்டம் ஒன்று முன்வைக்கப்பட வேண்டும் என்பதே தமது அரசாங்கத்தின் விருப்பம் என்றும் அரசாங்கமும் எதிர்க் கட்சிகளும் ஒன்றிணைந்து இதனை சாத்தியப்படுத்த வேண்டியது அவசியம் என்றும் அவர் வலியுறுத்தியுள்ளார்.

இலங்கையில் இன நல்லிணக்கத்தை ஏற்படுத்துவதில் மனித உரிமைகள் முக்கிய பங்கு வகிப்பதாகவும் அதனால் மனித உரிமைகளைப் பாதுகாப்பதற்கும் அதனை உறுதிப்படுத்துவதற்கும் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டியது அவசியம் என்றும் ரொபேர்ட் பிளேக் சுட்டிக்காட்டியுள்ளார்.